

ஸ்ரீரஸ்து.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.







## தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த
# திருப்பள்ளியெழுச்சி.

### தனியன் உரை.

(திருமாலையாண்டான் அருளிச்செய்தது.)

ஶ்லோ॥ தமேவ மத்வா பரவாஸுதேவம்
ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம் ।
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே ॥

தமேவ மத்வா பரவாஸுதேவம்
ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே

### பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| யஃ | யாவனொரு ஆழ்வார் | ப்ராபோதிகீம் | திருப்பள்ளி யுணர்த்துமதான |
| ராஜவத் | அரசனைப்போல் | ஸூக்திமாலாம் | திவ்யப்ரபந்தத்தை |
| அர்ஹணீயம் | பூஜிக்கத்தக்கவராய் | அக்ருத | அருளிச்செய்தாரோ |
| ரங்கேசயம் | திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்பவரான பெரியபெருமாளை | (தம் | அப்படிப்பட்ட) |
| தம் பரவாஸுதேவம் ஏவ | அப்படிப்பட்ட ஸாக்ஷாத் பரவாஸுதேவனாகவே | பகவந்தம் | ஜ்ஞானம் முதலிய குணங்கள் அமைந்த |
| மத்வா | ப்ரதிபத்திபண்ணி, | பக்தாங்க்ரிரேணும் | தொண்டரடிப்பொடியாழ்வாரை |
| | | ஈடே | துதிக்கின்றேன். |

கருத்து :—கோயிலிலே கண்வளர்ந்தருளுமவரான பெரியபெருமாளை ஸாக்ஷாத் பரவாஸுதேவனாகவே அநுஸந்தித்து அவர்விஷயமாகத் திருப்பள்ளி

யெழுச்சி யென்னும் திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்த தொண்டரடிப்பொடி யாழ்வாரைத் துதிக்கின்றேனென்றபடி. ராஜாக்களைப் பள்ளியுணர்த்துமா போலே ராஜாதிராஜனை அழகியமணவாளனைத் திருப்பள்ளியுணர்த்துகை யாலே "ராஜவதர்ஹணீயம்" எனப்பட்டது. சக்ரவர்த்தி திருமகனாலும் ஆரா திக்கப்பெற்ற பெருமாளிறே.

"காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்। ஸவாஸுதேவோ ரங்கேச꞉ ப்ரத்யக்ஷம் பரமம் பதம்॥—காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்-ஸவாஸுதேவோ ரங்கேச꞉ ப்ரத்யக்ஷம் பரமம்பதம்" "வடிவுடைவானோர் தலைவனே யென்னும் வண்திருவரங்கனே யென்னும்" "பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற வெம் பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்றிவை முதலான ப்ரமாணங்களை அடிபொற்றி "தமேவமத்வா பரவாஸுதேவம்" எனப்பட்டது.

இவ்வாழ்வார்க்கு "பக்தாங்க்ரிரேணு" என்றும், "தொண்டரடிப்பொடி" என்றும் திருநாமம் நிகழ்ந்ததற்குக் காரணம் இவரது சரித்திரத்திலே விளக்கப் பட்டது.

---

(திருவரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது.)

[இருவிகற்ப நேரிசை வெண்பா.]

மண்டங் குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்ட ரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத் தம்மானைப் பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்த வூர்.

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | தொண்ட ரடிப்பொடி | "தொண்டரடிப்பொடி" என்னுந் திருநாம முடையரான ஆழ்வார் |
| திணர்த்த | நெருங்கிப்படிந்திருக்கப் பெற்ற | உதித்த வூர் | திருவவதரித்த திவ்யதேச மாவது—; |
| வயல் | கழனிகள் சூழ்ந்த | மா மறையோர் | சிறந்த வைதிகர்கள் |
| தென் | அழகிய | மன்னிய | பொருந்தி வாழ்தற்கிடமான |
| அரங்கத்து | திருவரங்கத்தில் (கண்வளர்ந்தருள்கிற) | சீர் | சீர்மையையுடைய |
| அம்மானை | பெரியபெருமாளை | மண்டங்குடி | 'திருமண்டங்குடி' என்கிற |
| பள்ளி உணர்த்தும் | திருப்பள்ளி யுணர்த்து மவராய் | தொல் நகரம் | அநாதியான நகரமாகும் |
| பிரான் | பரமோபகாரகராய் | என்பர் | என்று பெரியோர் கூறுவர். |

அழகியமணவாளனுக்குத் திருப்பள்ளியெழுச்சி பாடியருளின தொண்டரடிப்பொடியாழ்வார் திருவவதரித்தருளின திருமண்டங்குடியே நமக்குப் புகலிட மென்றபடி. ஆழ்வார்களிற்காட்டிலும் அவர்கள் திருவவதாரஸ்தலமே ப்ராப்யதமம் என்ற விசேஷார்த்தம் உய்த்துணரத்தக்கது.

தனியன் உரை முற்றிற்று.

# திருப்பள்ளியெழுச்சி.

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களிரண்டிலுள் ஒன்றாகியது—இப்பிரபந்தம். திரு என்னுஞ்சொல் சிறப்புப்பொருளைக் காட்டி, பள்ளிக்கு (அல்லது, எழுச்சிக்கு) அடைமொழியாய் நின்றது. பள்ளி—படுக்கை. எழுச்சி—எழுந்திருத்தல்; 'சி' விகுதிபெற்ற தொழிற்பெயர். படுக்கையைவிட்டெழுந்திருத்தல் என்றதாயிற்று; இது, இத்திவ்யப்ரபந்தத்திற்கு இலக்கணையால் திருநாமமாயிற்று. ஒவ்வொரு பாட்டிலும் "பள்ளியெழுந்தருளாயே" என்று திருப்பள்ளியெழுச்சியை வேண்டுதலால். பிரபந்தத்திற்குப் பெயரிடும் வகையைக் கூறுமிடத்து, (நன்னூல்—பொதுப்பாயிரத்தில்) "முதனூல் கருத்தன் அளவுமிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்று கூறப்பட்டிருத்தலால் அதலிய பொருளினால் பேர்பெற்றது இந்நூல் என்க. (அதலிய பொருள்—நூலிற் கூறப்பட்ட விஷயம்.)

இத்திவ்யப்ரபந்தத்திற்கு நஞ்சீயரும் பெரியவாச்சான்பிள்ளையும் மணிப்ரவாள நடையில் மிகவும் கம்பீரமான நடையில் அருளிச்செய்த வியாக்கியானங்கள் உள்ளன. பெரும்பாலும் அவற்றைத்தழுவி "திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை" என்னும் இவ்வுரை வரையப்படுகின்றது.

---

## திருப்பள்ளியெழுச்சி உரையின்

# அவதாரிகை.

கீழ்ப் பிரபந்தமாகிய திருமாலையில் இவ்வாழ்வார் தாம் விஷயாந்தரங்களினின்றும் தமது நெஞ்சைமீட்டு பகவத்விஷயத்திலே சேர்த்தது முதலாகத் தாம் பெற்ற பேறுகளைச்சொல்லிக்கொண்டு போந்து பகவத் வைபவத்தையும் பாகவத வைபவத்தையும் பரக்க அருளிச்செய்து, எம்பெருமானோடே அணைந்து ஆநந்திக்கப் பெறவேணுமென்று பாரித்துக்கொண்டு பெரியபெருமாளருகே சென்றார்; சென்றவிடத்திலே பெருமாள் திருக்கண்களாலே குளிரநோக்குதல், கையை நீட்டி அணைத்தல், குசலப்ரச்நம் பண்ணுதல் ஒன்றுஞ் செய்யாதே பள்ளிகொண்டருளினார். இக்கண்வளர்த்தியானது ஸம்ஸாரிகளுடைய உறக்கம் போலே சோம்பலாலன்று; ஆச்ரிதர் பக்கலிலே அநாதரத்தாலுமன்று. பின்னை எத்தாலே யென்னில்; "சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்து மாதரார் கயற்கணென்னும் வலையுள் பட்டழுந்திக்கிடந்த இவ்வாழ்வார் அக்கொடிய நிலைமையெல்லாம் நீங்கித் தன்பக்கலிலே ப்ரவணரானபடியையும், அவர்க்கு இந்த ப்ராவண்யத்தை யுண்டாக்கின தன் பெருமையையும் நினைந்துகொண்டு

"நாகமிசைத் துயில்வான் போலுலகெல்லாம் நன்கொடுங்க" என்றபடி—மற்றுள்ளோரையும் இவரைப்போலே தன்பக்கலிலே ஆட்படுத்திக்கொள்ளும் வழி யாதுகொல்? என்று இச்சிந்தையோடே திருக்கண்வளர்ந்தருளினான்.

அவ்வெம்பெருமானை "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்று பலகாலும் திருப்பள்ளியுணர்த்தி, "தொண்டரடிப்பொடி யென்னுமடியனை அளியனென்றருளி உன்னடியார்க்காட்படுத்தாய்" என்று பாகவத பர்யந்தமான கைங்கரியத்தைக் கொண்டருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறதாய்த்து—இத்திவ்யப்ரபந்தம்.

அவதாரிகை முற்றும்.

---

கதிரவன்குணதிசைச் சிகரம்வந்தணைந்தான்
கனவிருளகன்றது காலையம்பொழுதாய் *
மதுவிரிந்தொழுகின மாமலரெல்லாம்
வானவரரசர்கள் வந்துவந்தீண்டி *
எதிர்திசைநிறைந்தனர் இவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும் பிடியொடுமுரசும் *
அதிர்தலிலலைகடல் போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மாபள்ளி யெழுந்தருளாயே. (௧)

| | |
|---|---|
| அரங்கத்து அம்மா | திருவரங்கத்தில் பள்ளி கொண்டருளும் ஸ்வாமியே! |
| கதிரவன் | ஸூர்யனானவன் |
| குணதிசை | கிழக்குத் திக்கிலே |
| சிகரம் | (உதயகிரியின்) கொடுமுடியிலே |
| வந்து அணைந்தான் | வந்துகூடினான்; |
| கன இருள் | (இரவில்) அடர்ந்திருந்த இருளானது |
| அகன்றது | நீங்கி யொழிந்தது; |
| அம் | அழகிய |
| காலைப் பொழுது ஆய் | காலைப் பொழுது வர, |
| மா மலர் எல்லாம் | சிறந்த புஷ்பங்களெல்லாம் |
| விரிந்து | விகாஸமடைய |
| மது ஒழுகின | தேன் வெள்ளமிடாநின்றன; |
| வானவர் | தேவர்களும் |
| அரசர்கள் | ராஜாக்களும் |
| வந்து வந்து | ஒருவர்க்கொருவர் முற்கோலிவந்து |
| ஈண்டி | திரண்டு |
| எதிர் திசை | திருக்கண்ணோக்கான தெற்குத் திக்கிலே |
| நிறைந்தனர் | நிறைந்துநின்றார்கள்; |
| இவரொடும் புகுந்த | இவர்களோடு கூடவந்த (இவர்களது வாஹனமாகிய) |
| இரு களிறு ஈட்டமும் | பெரிய ஆண்யானைத் திரள்களும் |
| பிடியொடு | பெண்யானைத் திரள்களும் |
| முரசும் | பேரிவாத்யங்களும் |
| அதிர்தலில் | சப்திக்கும்போது |
| எங்கும் | எத்திசையும் |
| அலை | அலையெறியாநின்ற |
| கடல் போன்று உளது | ஸமுத்ர கோஷத்தை ஒத்திருந்தது; |
| | (ஆதலால்) |
| பள்ளி எழுந்தருளாய் | திருப்பள்ளியை விட்டு எழுந்திருக்கவேணும். |

பொழுது விடிந்தமைக்குள்ள அடையாளங்களையும் திருப்பள்ளி யெழுந்திருக்கவேண்டிய காரணங்களையுங்கூறி உணர்த்துகின்றார்.

மஹாராஜன் பள்ளிகொண்டிராநின்றால் அவனை உணர்த்துகைக்குச் சிற்றஞ்சிறுகாலையில் ஸந்த்யாதீபங்கொண்டு வருவாரைப்போலே ஸூர்யபகவான் தன் கிரணங்களெல்லாவற்றோடும் கீழ்த்திசையில் உதயகிரிசிகரத்தில் வந்து அணையாநின்றான்; உடனே, செறிந்துகிடந்த இருள் சிதறிப்போயின: இருள் நீங்கினவாறே "சிற்றஞ்சிறுகாலை" என்னும்படியான அழகிய ப்ராஹ்ம முஹூர்த்தம் ஆக, தாமரை முதலிய மலர்களெல்லாம் விகஸித்துத் தேனொழுகாநின்றன; இந்திரன், குபேரன் என்னும்படியான பலதேவர்களும் ராஜாக்களும் தம் தம் பதவிகளில் நின்றும் நங்களுக்கு நழுவுதல் வாராமைக்குத் தேவரீரைத் திருவடித்தொழுகையிலுண்டான விரைவு மிகுதியாலே வந்து திரண்டு, "எம்பெருமான் திருப்பள்ளி யுணர்ந்தவாறே நம்மை முதலிலே நோக்கவேணும்" என்னுமாசையாலே திருக்கண்ணோக்கான எதிர் திசையிலே வந்து நின்றார்கள். இவர்களுடனே வந்த பெரிய யானைத்திரள்களும் இனம்பிரியாத பேடைகளும் வாத்ய கோஷங்களும் இந்த ஸமுத்ரப்ராயமாக முழங்குகிற முழக்கமானது சந்த்ரோதயத்தில் கடல்போலே ஒலியாநின்றது; உபய விபூதி நாதரான தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளி இவர்களுக்கு முகங்கொடுத்தருளி அடிமை கொண்டருளவேணுமென்பது கருத்து.

குணக்கு+திசை—குணதிசை; திசையொடு திசைப்பெயர் சேர உயிர்மெய்யும் ககரவொற்றும் நீங்கிற்று. சிகரம்—ஶிகரம் என்ற வடசொல் திரிபு. கனவிருள்—கந என்ற வடசொல் கனவெனத் திரிந்தது. ஆய்—ஆக என்னும் எச்சத்திரிபு. மது—மது என்ற வடசொல் திரிபு "மது விருந் தொழுகின" என்னும் அத்யாபக பாடம் வ்யாக்யாநத்துக்குச் சேராது. களிறு+ஈட்டம்—களிற்றீட்டம். முரசு—முரஜ என்ற வடசொல் திரிபு. ... (க)

கொழுங்கொடிமுல்லையின் கொழுமலரணவிக்
கூர்ந்ததுகுணதிசை மாருதமிதுவோ *
எழுந்தனமலரணைப் பள்ளிகொள்ளன்னம்
ஈன்பனிநனைந்த தமிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின் பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுறவதன் விடத்தினுக்கனுங்கி *
அழுங்கியவானையி னருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (உ)

| | | | |
|---|---|---|---|
| குணதிசை மாருதம் | கீழ்காற்றானது | கொழு மலர் | அழகிய மலர்களை |
| | | அணவி | அளைந்து கொண்டு |
| கொழு கொடி | செழுமை தங்கிய கொடியை யுடைத்தான | இதுவோ | இதோ |
| முல்லையின் | முல்லைச்செடியிலுண்டான | கூர்ந்தது | வீசாநின்றது; |

| | |
|---|---|
| மலர் அணை | புஷ்பசயனத்திலே |
| பள்ளிகொள் | உறங்குகின்ற |
| அன்னம் | ஹம்ஸங்களானவை, |
| ஈன் பனி நனைந்த | (மழை போல்) சொரிகிற பனியாலே நனைந்த |
| தம் | தங்களுடைய |
| இரு சிறகு | அழகிய இறகுகளை |
| உதறி | உதறிக்கொண்டு |
| எழுந்தன | உறக்கம் விட்டெழுந்தன ; |
| விழுங்கிய | (தன் காலை) விழுங்கின |
| முதலையின் | முதலையினுடைய |
| பிலம் புரை | பாழி போன்ற |
| பேழ் வாய் | பெரியவாயிலுள்ள |
| வெள் எயிறு உற | வெளுத்த கோரப்பற்கள் ஊன்ற |
| அதன் | அம்முதலையினுடைய |
| விடத்தினுக்கு | பல் விஷத்தினுக்கு |
| அனுங்கி அழுங்கிய | மிகவும் நோவுபட்ட |
| ஆனையின் | கஜேந்திராழ்வானுடைய |
| அரு துயர் | பெரிய துக்கத்தை |
| கெடுத்த | போக்கியருளின |
| அரங்கத்தம்ம ! பள்ளி எழுந்தருளாய்—. | |

ஸூர்யனுக்கே நேரே உறவான தாமரைப்பூவினுடைய விகாஸமேயன்றியே நிலப்பூவான முல்லைப்பூவும் விகஸித்து, கீழ்காற்றானது அதன் மணத்தைக் கொண்டு தேவரீரைத் திருப்பள்ளியுணர்த்துமாபோலே வந்து வீசாநின்றது. இக்காற்று வீசினவாறே, புஷ்பசயனத்திலே கிடந்துறங்கின ஹம்ஸமிதுனங்களும் 'பொழுது விடிந்தது' என்றறிந்து, இரவெல்லாம் தமது இறகுகளிற் படிந்திருந்த பனித்திவலைகளை உதறிக்கொண்டு உறக்கம் விட்டெழுந்தன. கஜேந்திராழ்வானை அன்று கொடிய ஆபத்திலின்றும் விடுத்துக் காத்தருளினாற்போலே இன்று அடியோங்களைக் காத்தருள்வதற்காக தேவரீர் திருப்பள்ளி விட்டெழுந்தருள வேணுமென்கிறது.

[விழுங்கிய இத்யாதி.] முதலையானது யானையின்காலைச் சிறிது கவ்வின மாத்திரமேயல்லது விழுங்கவில்லையே; அப்படியிருக்க, "விழுங்கிய முதலையின்" என்னலாமோ? எனின்; பசங்கள் கிணற்றினருகே போயிற்றென்றால் "ஐயோ! குழந்தை கிணற்றில் விழுந்துவிட்டது! விழுந்துவிட்டது" என்பதுபோல் இதனைக்கொள்க.

கூர்ந்தது=கூர்தல்—மிகுதல், அதிகமாதல். மாருதம்—வடசொல். "பள்ளி கொண்டன்னம்" என்ற சிலர் பாடத்தில், பள்ளிகொண்ட+அன்னம் எனப் பிரித்து, தொகுத்தல் விகாரமாகக் கொள்க. ஈன் பனி—உண்டானபனி என்னுதல், பெய்கிற பனி என்னுதல். பிலம்—ஸுஷிரம். புரை—உவமவுருபு. பேழ்—பெருமை. விடம்—விஷம். அருந்துயர்—மற்றொருவராலும் போக்க அரிதான துயர். ... ... ... ... ... (௨)

சுடரொளிபரந்தன சூழ்திசையெல்லாம்
துன்னியதாரகை மின்னொளிசுருங்கி *
படரொளிபசுத்தனன் பனிமதியிவனோ
பாயிருளகன்றது பைம்பொழிற்கமுகின் *

மடலிடைக்கீறி வண்பாளைகள்நாற
வைகறைகூர்ந்தது மாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தரு திகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (௩)

| | |
|---|---|
| சூழ் திசை எல்லாம் | கண்டவிடமெங்கும் |
| சுடர் ஒளி | ஸூர்ய கிரணங்களானவை |
| பரந்தன | பரவிவிட்டன; |
| துன்னிய | (ஆகாசத்தில்) நெருங்கிய |
| தாரகை | நக்ஷத்திரங்களினுடைய |
| மின் ஒளி | மிக்க தேஜஸ்ஸானது |
| சுருங்கி | குறைவுபட்டது மன்றி |
| படர் ஒளி | மிக்க ஒளியையுடைய |
| பனி மதி இவன் | இக்குளிர்ந்த சந்திரனும் |
| பசுத்தனன் | ஒளிமழுங்கினான்; |
| பாய் இருள் | பரந்த இருட்டானது |
| அகன்றது | நீங்கிற்று; |
| வைகறை மாருதம் இது | இந்த விடியற்காற்றானது |
| பை | பசுமை தங்கிய |
| பொழில் | சோலைகளிலுள்ள |
| கமுகின் | பாக்குமரங்களினுடைய |
| மடலிடை கீறி | மடலைக்கீற (அத்தாலே) |
| வண் பாளைகள் நாற | அழகிய பாளைகளானவை பரிமளிக்க (அப்பரிமளத்தை முகந்து கொண்டு) |
| கூர்ந்தது | வீசாநின்றது; |
| அடல் | பெருத்த மிடுக்கையுடைத்தாய் |
| ஒளி திகழ்தரு | தேஜஸ்ஸால் விளங்காநின்றுள்ள |
| திகிரி | திருவாழியாழ்வானை |
| அம் தட கை | அழகிய பெரிய திருக்கையிலே யுடைய |
| அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாய்—. | |

முதற்பாட்டில், கதிரவன் கீழ்த்திசையில் உதயகிரி சிகரத்திலே வந்து சேர்ந்தான் என்றது; இப்பாட்டில்—நேராக உதித்துத் தனது தேஜஸ்ஸை எங்கும் பரப்பிக்கொண்டு வந்து தோன்றினானென்கிறது.

கண்பார்வை புகுமிடமெங்கும் ஸூர்யகிரணங்கள் பரவிவிட்டன; நக்ஷத்திரங்கள் ப்ரகாசம் குன்றிப்போய்விட்டது; நக்ஷத்ராதிபதியான சந்திரனும் வைவர்ண்ய மடைந்தான்; [பகல் விளக்குப் போலாயினன் என்றபடி.] பாக்குச் சோலைகளில் மடல்விரிந்த பாளையின் பரிமளத்தை முகந்துகொண்டு விடியற்காற்றானது மிகுதியாக வீசாநின்றது; கையுந் திருவாழியுமான தேவரீருடைய அழகை நாங்கள் கண்டுகளிக்கும்படி திருப்பள்ளியுணர்ந்தருளவேணு மென்கிறது. "பனிமதி, படரொளி பசுத்தனன்" என்றும் அந்வயிக்கலாம்.

வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"ஆகாசப் பரப்பெல்லாம் முத்துப் பந்தல் விரித்தாற்போலேயிருக்கிற நக்ஷத்ரங்களினுடைய தீப்தியும் மறைந்து இவற்றுக்கு நிர்வாஹகனான சந்த்ரனுடைய தீப்தியும் போய்த்து; தேவரீர் * அமலங்களாக விழித்தருளாமையாலே சந்த்ரன் தன்பரிகரமும்தானும் வேறுருக்கொண்டான்."

பாயிருள் = பாய்தல்—வியாபித்தல். பசுமை + பொழில்—பைம் பொழில்; "ஈறுபோதல் இடையுகரம் இய்யாதல், ஆதிநீடல் அடியகரம் ஐயாதல், தன்னொற்றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல், இனமிகலினையவும் பண்பிற்கியல்பே" என்பது நன்னூல். கமுகு—க்ரமுக என்னும் வடசொற்சிதைவு. பாளை—உட்குருத்து; வாஹீ என்ற வடசொல் திரிபு. "வண்பாளைகள்" என்றவிடத்து, பாளைக்கு வண்மையாவது ஔதார்யம் = தன்பக்கலுள்ள மணத்தைக்கொடுக்கை என்றும் கொள்ளலாம். வைகறை—விடியற்காலம். ... .... (௩)

மேட்டிளமேதிகள் தளைவிடுமாயர்கள்
வேய்ங்குழலோசையும் விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசை பரந்தனவயலுள்
இரிந்தனசுரும்பினமிலங்கையர்குலத்தை *
வாட்டியவரிசிலை வானவரேறே !
மாமுனிவேள்வியைக் காத்து * அவபிரதம்
ஆட்டியவடுதிற லயோத்தியெம்மரசே !
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே. (௪)

| | |
|---|---|
| மேடு இள மேதிகள் | உயர்த்தியும் இளமையும் தங்கிய எருமைகளை |
| தளை விடும் | (மேய்கைக்குக்) கட்டவிழ்த்து விடுகிற |
| ஆயர்கள் | இடையர் (ஊதுகிற) |
| வேய்ங்குழல் ஓசையும் | புல்லாங்குழலின் நாதமும் |
| விடை | எருதுகளின் (கழுத்திற் கட்டியுள்ள) |
| மணி | மணிகளினுடைய |
| குரலும் | ஓசையும் (ஆகிய) |
| ஈட்டிய இசை | இவ்விரண்டும் கூடின த்வனியானது |
| திசை பரந்தன | திக்குக்களெங்கும் பரவி விட்டது; |
| வயலுள் | கழனிகளிலுள்ள |
| சுரும்பு இனம் | வண்டுகளின் திரள் |
| இரிந்தன | ஆரவாரித்துக்கொண்டு கிளம்பின; |
| இலங்கையர் குலத்தை | ராக்ஷஸவர்க்கத்தை |
| வாட்டிய | உருவழித்த |
| வரி சிலை | அழகிய சார்ங்கத்தையுடைய |
| வானவர் ஏறே | தேவாதிதேவனே ! |
| மா முனி | விச்வாமித்ர மஹர்ஷியினுடைய |
| வேள்வியை | யாகத்தை |
| காத்து | நிறைவேற்றுவித்து |
| அவபிரதம் ஆட்டிய | அவப்ருதஸ்நாநம் செய்வித்தருளின |
| அடு திறல் | (விரோதிகளை) ஒழிக்கவல்ல மிடுக்கையுடையனாய் |
| அயோத்தி எம் அரசே | அயோத்தியாபுரியை ஆளுகையாலே எங்களுக்கு ஸ்வாமியானவனே ! |

அரங்கத்தம்மா ! பள்ளி எழுந்தருளாயே—.

இளங்கன்றாயிருக்கச்செய்தேயும் ஓங்கியிருப்பனவான எருமைக்கன்றுகளை மேய்ச்சலுக்காகக் கட்டவிழ்த்துவிடுகிற இடையர் ஊதுகிற புல்லாங்குழலோசையும், சேக்களின் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணிகளின் ஒலியும் இவ்விரண்டும்

விரவிய த்வநியானது எத்திசையும் பரவிவிட்டது. சோலைக்குள் மாத்திர மன்றியே வெளியிலுமான வயலில் தடாகங்களிலுண்டான தாமரை முதலிய வற்றில் வண்டுகளானவை ஆரவாரஞ்செய்துகொண்டு சிதறின; தேவர்களின் காரியமும் முனிவர்களின் காரியமுஞ்செய்தற்குப் படாதனபட்ட பெருமானே! இன்று எங்கள் காரியமும் சிறிது செய்வதற்குப் பள்ளியுணர்ந்தருளவேணு மென்கிறது.

[இரிந்தன சுரும்பினம்.] பொழுதுவிடிந்து பூக்கள் அலர்ந்தபிறகு வண்டு கள் வந்து படிந்து தேனைப் பருகிவிட்டு ஆர்த்துக்கொண்டு கிளம்பிவிட்டன- என்றும், நேற்று மாலைப்பொழுதில் மதுபானத்திற்காகத் தாமரை மலரினுள் புகுந்தவாறே ஸூரியன் அஸ்தமிக்க, மலர் மூடிக்கொள்ள, இரவெல்லாம் அத னுள்ளே கிடந்து வருந்தின வண்டுகள் இப்பொழுது விடிந்தவாறே பூக்கள் மலர, ஆரவாரஞ்செய்துகொண்டு கிளம்பி ஓடிப்போயின என்றும் கருத்துரைக் கலாம். இரிதல்—சாய்தல், ஓடுதல்.

“வேள்வியுங் காத்து” என்பது சிலர்பாடம். அவபிரதம்—அவப்ருத மென்னும் வடசொல் திரிபு; யஜ்ஞயாகாதிகளின் முடிவில் செய்யும் ஸ்நாநம். அயோத்தி—அயோத்யா. .... .... .... (௪)

புலம்பினபுட்களும் பூம்பொழில்களின்வாய்
போயிற்றுக்கங்குல் புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக் கனைகடலரவம்
களிவண்டுமிழற்றிய கலம்பகம்புனைந்த *
அலங்கலந்தொடையல்கொண் டடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தன ராதலிலம்மா! *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான்! பள்ளியெழுந்தருளாயே. (௫)

| | | | |
|---|---|---|---|
| பூ | பூத்திராநின்றுள்ள | கனை | கோஷஞ்செய்கிற |
| பொழில்களின் வாய் | சோலைகளிலுள்ள | கடல் | கடலினுடைய |
| புட்களும் | பறவைகளும் | அரவம் | ஓசையானது |
| புலம்பின | (உணர்ந்து) ஆரவாரஞ் செய்யாநின்றன; | கலந்தது | வியாபித்தது; |
| கங்குல் | இரவானது | களி | தேனைப்பருகிக் களிக்கின்ற |
| போயிற்று | கழிந்தது; | வண்டு | வண்டுகளானவை |
| புலரி | ப்ராதஃகாலமானது | மிழற்றிய | சப்தியாநிற்கிற |
| புகுந்தது | வந்தது; | கலம்பகன் புனைந்த | பலவகைப்பூக்களாலே தொடுக்கப்பட்ட |
| குணதிசை | கீழ்த்திசையிலே | அம் | அழகிய |

அலங்கல் தொடையல் கொண்டு — அலங்கல்மாலைகளை ஏந்திக்கொண்டு
அமரர்கள் — தேவர்கள்
அடி இணை பணிவான் — (தேவர்களுடைய) திருவடியிணைகளில் பணிமாறுகைக்காக
புகுந்தனர் — வந்துநின்றனர்;
ஆதலில் — ஆகையாலே,
அம்மா — ஸர்வஸ்வாமின்!
இலங்கையர் கோன் வழிபாடு செய் கோயில் — லங்கேச்வரனான விபீஷணாழ்வான் தாலவ்ருத்தி பண்ணப்பெற்ற கோயிலிலே (கண்வளர்ந்தருளுகிற)
எம்பெருமான்!—அஸ்மத் ஸ்வாமியே!
பள்ளி எழுந்தருளாயே—.

கீழ்ப்பாட்டில் வயற்காடுகளில் வண்டுகள் உணர்ந்தமை கூறப்பட்டது; அவ்வளவேயல்ல; சோலைவாய்ப்பாலே பொழுதுவிடிந்ததும் அறியப்பெறாதே பரமபோக்யமாகக் கிடந்துறங்கக்கடவ பறவைகளும் போதுவிடிந்தபடி கண்டு உணர்ந்தமை இப்பாட்டில் கூறப்படுகின்றது. வயலுள் வண்டுகள் உணர்ந்தது பகவத்பாவனர் உணர்ந்ததொக்கும்; பூம்பொழில்களிற் பறவைகள் உணர்ந்தது ஸம்ஸாரிகள் உணர்ந்ததொக்கும் என்பர் பெரியவாச்சான்பிள்ளை. உறங்குகைக்கே அதிக ஸாமக்ரியுள்ள ஸம்ஸாரிகள் உணர்வதன்றோ அருமை.

பொழில்களின் வாய்=வாய்—ஏழனுருபு. அரவம்-ரவம் என்ற வடசொல் விகாரம். ... ... ... ... (௪)

இரவியர்மணி நெடுந் தேரொடுமிவரோ
இறையவர்பதினொரு விடையருமிவரோ *
மருவியமயிலின னறுமுகனிவனே
மருதரும்வசுக்களும் வந்துவந்தீண்டி *
புரவியோடாடலும் பாடலுந்தேரும்
குமரதண்டம்புகுந் தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின் கோயில்முன்னிவரோ
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே. (௫)

மணி — விலக்ஷணமாய்
நெடு — பெரிதான
தேரொடும் — தேரோடுகூட
இரவியர் — பன்னிரண்டு ஆதித்யர்களும்
இறையவர் — ஜகத்துக்கு நிர்வாஹகர்களான
பதினொரு விடையரும் — ஏகாதச ருத்ரர்களும்
மருவிய — பொருந்திய
மயிலினன் — மயில்வாகனத்தையுடைய
அறுமுகன் — ஸுப்ரஹ்மண்யனும்
மருதரும் — மருத்கணங்களான ஒன்பதின்மரும்
வசுக்களும் — அஷ்ட வஸுக்களும்
வந்து வந்து — ஒருவருக்கொருவர் முந்திக்கொண்டு வந்து
ஈண்டி — நெருங்கி நிற்க
(இவர்களுடைய வாஹநமான)
புரவியோடு தேரும் — குதிரைகள் பூண்ட ரதங்களும்
பாடலும் ஆடலும் — பாட்டும் கூத்துமாய்

| | | | |
|---|---|---|---|
| குமாரதண்டம் புகுந்து | தேவஸேநா ஸமூஹங்கள் வந்து புகுந்து | கோயில் | கோயிலில் |
| ஈண்டிய வெள்ளம் | நெருங்கியிருக்கிற திரளானது | நின் முன் | தேவரீர் திருக்கண்ணோக்கத்திலே (நிற்கின்றது;) |
| அரு வரை அனைய | பெரிய மலைபோன்ற | அரங்கத்தம்மா! பள்ளி யெழுந்தருளாயே—. | |

த்வாதசாதித்யர்கள், ஏகாதசருத்ரர்கள், தேவஸேநாபதியான ஷண்முகன், மருத்துக்களாகிற தேவதைகள், அஷ்டவஸுக்கள் மற்றும் சொல்லிச்சொல்லாத தேவதைகளெல்லாம் பரிகரஸமேதராய், தேவரீர் திருப்பள்ளியுணர்ந்தருளும் போதில் முதற் கடாக்ஷவீக்ஷணத்தை விரும்பி "நான் முற்பட நான் முற்பட" என்று திரண்டு வந்து நின்றார்கள்; திருப்பள்ளியுணர்ந்தருளிக் கடாக்ஷித்தருள வேணுமென்கிறது.

"[குமாரதண்டம் புகுந்தீண்டிய வெள்ளம்] 'தேவ ஸேநாபதி' என்று முன்னே சொல்லுகையாலே 'குமரன்' என்று அவன் பேராய், 'தண்டம்' என்று தண்டுக்குப் பேராய், இத்தால் ஸேனையும் வரக்கடவதிறே; அங்ஙனன்றியே, தேவஜாதியாகையாலே ஷோடச வயஸ்கராயிருப்பார்களிறே. இனி, தண்டம் என்கிறது அவ்வவராயுத பேதங்களை யென்னவுமாம்" என்பது வியாக்யானம். ... ... ... ... (௬)

அந்தரத்தமரர்கள் கூட்டங்களிவையோ
அருந்தவமுனிவரும் மருதருமிவரோ *
இந்திரனானையும் தானும்வந்திவனே
எம்பெருமானுன கோயிலின்வாசல் *
சுந்தரர்நெருக்க விச்சாதரர்நூக்க
இயக்கரும்மயங்கினர் திருவடிதொழுவான் *
அந்தரம்பாரிட மில்லைமற்றிதுவோ
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே. (எ)

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | எமக்கு ஸ்வாமியான | கூட்டங்கள் | இவர்களுடைய பரிவாரங்களும் |
| உன கோயிலின் வாசல் | தேவரீருடைய திருக்கோயிலின் வாசலிலே | அரு தவம் முனிவரும் | மஹாதபஸ்விகளான ஸநகாதி மஹர்ஷிகளும் |
| இந்திரன் தானும் | தேவேந்திரனும் | மருதரும் | மருத்கணங்களும், |
| ஆனையும் | (அவனது வாஹநமான) ஐராவத யானையும் | இயக்கரும் | யக்ஷர்களும், |
| வந்து | வந்திருப்பது மன்றி, | சுந்தரர் நெருக்க | கந்தர்வர் நெருக்கவும் |
| அந்தரத்து அமரர்கள் | அண்டத்துக்குள் இராநின்ற தேவர்களும் | விச்சாதரர் நூக்க | வித்யாதரர்கள் தள்ளவும் |

| | |
|---|---|
| திருவடி தொழுவான் மயங்கினர் | (தேவரீருடைய) திருவடிகளைத் தொழுவதற்காக வந்து மயங்கி நின்றனர்; |
| அந்தரம் | ஆகாசமும் |
| பார் | பூமியும் |
| இடம் இல்லை | அவகாசமற்றிராநின்றது; |
| அரங்கத்தம்மா! | பள்ளியெழுந்தருளாய்—. |

அந்தரம் என்றும், அண்டம் என்றும், ஆகாசம் என்றும் தேவலோகத்துக்குப்பேர். முனிவரும் மருதரும் இயக்கரும் திருவடி தொழுவான் மயங்கினர் என்று அந்வயம். சுந்தரர்- அழகுபொருந்தியவர் என்றபடி. விச்சாதரர்-வித்யாதரா என்ற வடசொல்திரிபு. நூக்குதல்-தள்ளுதல். இயக்கர்-யக்ஷ என்ற வடசொல் திரிபு. முனிவரும் மருதரும் யக்ஷர்களும் வந்து புகுகையில் கந்தர்வர்களும் வித்யாதரர்களும் அவர்களிடையே புகுந்து நெருக்கித் தள்ளுகின்றனரென்க. (எ)

வம்பவிழ்வானவர் வாயுறைவழங்க
மாநிதிகபிலையொண் கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமைக்கலம்காண்டற்கு
ஏற்பனவாயின கொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர் புகுந்தனரிவரோ
தோன்றினனிரவியும் துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின் றகல்கின்றதிருள்போய்
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே. (அ)

| | |
|---|---|
| வழங்க | (தேவரீருக்கு) ஸமர்ப்பிப்பதற்காக |
| வம்பு அவிழ் | பரிமளம் மிகுந்த |
| வாயுறை | அருகம்புல்லும் |
| மா | சிறந்த |
| நிதி | சங்கநிதி பத்மநிதிகளும் (கையிலே உடையராய்க் கொண்டு) |
| வானவர் | தேவர்களும், |
| கபிலை | காமதேநுவும் |
| ஒண் | ஒளி பொருந்திய |
| கண்ணாடி முதலா | கண்ணாடி முதலாக, |
| எம்பெருமான் | ஸ்வாமியான தேவரீர் |
| காண்டற்கு | கண்டருளுகைக்கு |
| ஏற்பன ஆயின | தகுதியாயுள்ளவையான |
| படிமைக் கலம் கொண்டு | உபகரணங்களெல்லாவற்றையுங் கொண்டு |
| நல் முனிவர் | மஹர்ஷிகளும் |
| தும்புரு நாரதர் | தும்புரு நாரதர்களும் |
| புகுந்தனர் | வந்து நின்றார்கள்; |
| | (இதுவுமன்றி,) |
| இரவியும் | சூரியனும் |
| துலங்கு ஒளி | (தனது) மிக்க தேஜஸ்ஸை |
| பரப்பி | எங்கும் பரவச்செய்து கொண்டு |
| தோன்றினன் | உதயமானான்; |
| இருள் | இருளானது |
| அம்பரதலத்தில் நின்று | ஆகாசத்தினின்றும் |
| போய் அகல்கின்றது | நீங்கிப்போயிற்று; |
| அரங்கத்தம்மா! | பள்ளியெழுந்தருளாய்— |

“வம்பவிழ்” என்பதை வானவர்க்கே அடைமொழியாக்கி, நித்ய யௌவனத்தையுடைய தேவஜாதிகள் என்றும் பொருள்சொல்லலாம். படிமைக்கலம்-திருவாராதன உபகரணம். நிதி, கபிலா, தும்புருநாரதர், ரவி, அம்பரதலம்-வடசொற்கள். ... ... ... ... (௮)

ஏதமில்தண்ணுமை யெக்கம்மத்தளி
யாழ்குழல்முழவமோ டிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர் கின்னரர்கருடர்கள்
கெந்தருவரிவர் கங்குலுமெல்லாம் *
மாதவர்வானவர் சாரணரியக்கர்
சித்தரும்மயங்கினர் திருவடிதொழுவான் *
ஆதலிலவர்க்குநா ளோலக்கமருள
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே. (௯)

| | | | |
|---|---|---|---|
| ஏதம் இல் | குற்றமற்ற | மா தவர் | மஹர்ஷிகளும் |
| தண்ணுமை | சிறுபறையும் | வானவர் | தேவர்களும் |
| எக்கம் | ஒற்றைத்தந்தியையுடைய வாத்யமும் | சாரணர் | சாரணர்களும் |
| மத்தளி | மத்தளமும் | இயக்கர் | யக்ஷர்களும் |
| யாழ் | வீணையும் | சித்தரும் | ஸித்தர்களும் |
| குழல் | புல்லாங்குழல்களுமாய் | திருவடி தொழுவான் | (தேவரீருடைய) திருவடிகளில் வணங்குகைக்காக |
| திசை | திக்குக்களெங்கும் | கங்குலும் எல்லாம் | இரவெல்லாம் |
| முழவமோடு | இவற்றின் முழக்கத்தோடு | மயங்கினர் | (நெருக்கத்தில் வருந்தி) மோஹமுற்றனர்; |
| இசை கெழுமி கீதங்கள் பாடினர் | இசை மாட்டிப் பாட்டு பாடக்கடவரான | ஆதலில் | ஆகையாலே |
| கின்னரர் | கின்னரர்களும் | அவர்க்கு | அவர்களுக்கு |
| கருடர் | கருடர்களும் | நாள் ஓலக்கம் அருள | பகலோலக்க மருளுகைக்காக |
| கெந்தருவரும் | கந்தர்வர்களும் | அரங்கத்தம்மா! பள்ளி யெழுந்தருளாய்—. | |
| இவர் | இதோ மற்றுள்ளவர்களும் | | |

வாத்தியங்களுக்குக் குற்றமில்லாமையாவது—நாதம் நன்கு உண்டாம்படி அமைதியாயிருக்கை. எக்கம்—தானமென்றுங்கூறுவர். முழவம்—‘பெருவாயன்’ என்றொரு வாத்யவிசேஷமுண்டு; அதனைச் சொல்லிற்றாகவுமாம்; அப்போது—யாழ்குழல் முழவங்களிலுண்டான நாதமானது திசைகள்தோறும் வியாபிக்கும்படி கின்னராதிகள் கீதங்களைப் பாடாநின்றனர்; கெந்தருவம் இவர்-கெந்தர்வர்களும் இதோ அருகே வந்திராநின்றார்கள் எனப்பொருள் கொள்க. சாரணர்—தேவஜாதியிலே உலாவித்திரியுமவர்கள்,

விமானஸஞ்சாரிகளான தேவர்களோடு மஹர்ஷிகளோடு யக்ஷவித்தசாரண ரென்கிற தேவர்களோடு கிந்நரர் கருடர்கள் என்கிற மங்களாசாஸநம் பண்ணுவாரோடு இவர்களில் தலைவரான கந்தர்வர்களோடு வாசியற, சிறியார் பெரியார் என்னாதே இங்ஙனே வந்து படுகாடுகிடக்கின்றனர்; திருப்பள்ளியுணர்ந்தருளி எல்லாரும் வாழும்படி கடாக்ஷித்தருளவேணுமென்கிறது.

கீதம்—கீதம். 'கந்நருவர்' என்பது மோனையின்பம் நோக்கிக் "கெந்தருவர்" என்றாயிற்று. நாளோலக்கம்—ப்ராத: காலத்திலே சீரியசிங்காசனத்திலே பெரிய கோஷ்டியாக எழுந்தருளியிருந்து எல்லாரையும் குளிரக்கடாக்ஷிக்கும் ஸதஸ்ஸு. ... ... ... ... (௯)

கடிமலர்க்கமலங்கள் மலர்ந்தனவிவையோ
கதிரவன்கனைகடல் முளைத்தனனிவனோ *
துடியிடையார்சுரி குழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர் சூழ்புனலரங்கா *
தொடையொத்ததுளவமும் கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்ட ரடிப்பொடியென்னு
மடியனை * அளியனென் றருளியுன்னடியார்க்
காட்படுத்தாய்பள்ளி யெழுந்தருளாயே. (௰)

| | | | |
|---|---|---|---|
| புனல் சூழ் | திருக்காவேரி தீர்த்தத்தாலே சூழப்பட்ட | சுரி குழல் | (அமைந்த) சுருண்டமயிர் முடியை |
| அரங்கா | ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுமவனே! | பிழிந்து உதறி | (நீர்ப் பசையறப்) பிழிந்து உதறிவிட்டு |
| கடி | பரிமளமுடைய | துகில் உடுத்து | (தம்தம்) ஆடைகளை உடுத்துக்கொண்டு |
| கமலம் மலர்கள் | தாமரைப் பூக்களானவை | ஏறினர் | கரையேறிவிட்டார்கள் |
| மலர்ந்தன | (நன்றாக) மலர்ந்துவிட்டன; | தொடை ஒத்த | ஒழுங்காகத் தொடுக்கப்பெற்ற |
| கதிரவன் | (தாமரையை மலர்த்தவல்ல) ஸூர்யனானவன் | துளவமும் | திருத்துழாய் மாலையும் |
| | | கூடையும் | பூக்குடலையும் |
| கனை கடல் | கோஷஞ் செய்கையையே இயல்வாகவுடைய கடலிலே | பொலிந்து தோன்றிய | விளங்கத் தோற்றப்பெற்ற |
| | | தோள் | தோளையுடைய |
| முளைத்தனன் | உதயகிரியிலே வந்து தோன்றினன்; | தொண்டரடிப்பொடி யென்னும் | 'தொண்டரடிப்பொடி' என்ற திருநாமமுடைய |
| துடி இடையார் | உடுக்கைபோன்ற (ஸூக்ஷ்மமான) இடையையுடைய மாதர் | அடியனை | தாஸனை |

| | | | |
|---|---|---|---|
| அளியன் என்று அருளி | 'இருடை பண்ணுகைக்கு உரிய பாத்திரம்' என்று திருவுள்ளம்பற்றி அங்கீகரித்தருளி | ஆள் படுத்தாய் | ஆளாக்க வேணும்; (அதற்காக) |
| உன் அடியார்க்கு | தேவரீருடைய நித்யகிங்கரர்களான பாகவதர்களுக்கு | பள்ளி எழுந்தருளாய் | திருப்பள்ளியைவிட்டு எழுந்தருளவேணும். |

கீழ்க்கூறிய தேவரிஷி கந்தர்வாதிகள் அப்படி கிடக்கட்டும்; "கள்ளத் தேன் நானுந் தொண்டாய்த் தொண்டுக்கே கோலம்பூண்டு" என்றபடி—தேவரீருடைய அத்தாணிச் சேவகன் என்று தோற்றும்படி பூக்குடலையும் தோளுமாக வந்து நிற்கிற அடியேனை அங்கீகரித்தருளிப் பாகவதர் திருவடிகளிற் காட்டிக் கொடுப்பதற்காகத் திருப்பள்ளி யுணர்ந்தருளவேணுமென்று பிரார்த்தித்து இப் பிரபந்தத்தைத் தலைக்கட்டுகின்றனர்.

கதிரவன் கடலில் முளைத்தான் என்பதும் மலையினுச்சியில்முளைத்தான் என்பதும் உபலக்ஷணமெனப்படும்; 'மாவாமெருவம்ஞ:' என்று காட்டுமாபோலே.

[துடியிடையார் இத்யாதி.] "கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்...... அணியரங்கன்" என்கிற ஸமாதியாலே சொல்லுகிறபடி. ஆயர்மாதர் விடியற் காலத்திலே எழுந்து * கோழியழைப்பதன்முன்னம் குடைந்து நீராடப்போருகையில் நீயும் அவர்கள் பின்னேசென்று ஒளித்திருந்து அங்கவர் பூந்துகில் வாரிக்கொண்டிட்டு, அரைவரிடையார் இரப்ப "மங்கை நல்லீர்! வந்து கொண்மின்" என்று மரமேறியிருக்க, "தோழியும் நானுந் தொழுதோம்" என்பது, "கோலங்கரியபிரானே! குருந்திடைக்கூறை பணியாய்" என்பது ஆக இப்படி நிகழும் ரஸாநுபவங்களை நீ இழந்தாயாகிறாயே; அவ்வாய்ச்சிகள் நீராடித் தலைதுடைத்துத் துகிலுடுத்துக் கரையேறிவிட்டார்களே என்கிறது.

[கூடையும் பொலிந்து தோன்றிய தோள்.] "ஆழியுஞ்சங்கு முடைய நங்களடிகள்" என்று—எம்பெருமானுக்கு சேஷித்வஸூசக லக்ஷணமாகத் திருவாழி திருச்சங்கு அமைந்தாற்போலே ஆழ்வார்க்கு சேஷத்வஸூசக லக்ஷணமாகப் பூக்குடலை அமைந்தபடி. "வநித்ரபிடகாயார:" என்று—வநவாஸத்திலே மண்வெட்டியும் கூடையுமிறே இளையபெருமாளுக்கு நிருபகமாகச் சொல்லிற்று.

[உன் அடியார்க்கு ஆட்படுத்தாய்.] எம்பெருமானளவிலே நிற்பதோடு ஸம்ஸாரத்திலே மாய வன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்திலே கால்தாழ்ந்து நிற்பதோடு ஒருவாசியில்லை; பகவச்சேஷத்வத்துக்கு எல்லைநிலம் பாகவதகைங்கர்யம் என்கிற ஸகல சாஸ்த்ர ஸாரப்பொருளை நன்கு உணர்ந்தவராதலால் தாம்பெற்ற திருநாமத்துக்கு ஏற்ப, பாகவத கைங்கரியத்தைப் பிரார்த்திக்கின்றார்.

[பள்ளி யெழுந்தருளாய்.] தேவரீர் பள்ளிக்கொண்டிருப்பது ஸம்ஸாரிகளைப்போலே சோர்வு சோம்பலாலன்றே; 'எவனைப் பிடிக்கலாம்? எவனைத் திருத்தலாம்?" என்று யோகுசெய்யுமுறக்க மித்தனையன்றோ? அந்த யோகநித்திரைக்குப் பலன் கைபுகுந்தபின்பும் உறங்கக்கடவதோ? உணர்ந்தருளலாகாதோ?" என்கிறார். ... ... ... ... (௰).

அடிவரவு:—கதிர் கொழு சுடர் மேட்டு புலம்பின இரவியர் அந்தரம் வம்பு ஏதம் கடி அமலன்.




தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

